ஆகுபெயர். இல்லார் - குறிப்பு வினையாலணையும் பெயர். அமரா ரென்பது சாகாதா ரென்பது; இஃது இலக்கணை. ஆயினு மென்பது உயர்வு சிறப்பும்மை.

Be it the fiery-eyed *Vishnu* himself, whom the Gods in the heaven worship, if he has in his hand naught to give, the harlots, whose body is as soft as tender flower-buds, will straightway dismiss him, bowing with folded hands. (373)

374. ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக்
காணமி லாதார் கடுவனையர்—காணலெ
செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையா
ரக்கார மன்னா ரவர்க்கு.

(ப - ரை) ஆணம் இல் நெஞ்சத்து-அன்பு நீங்கிய மனத்தினை யுடைய, அணி நீலம் கண்ணார்க்கு-அழகிய நீல மலர்போன்ற கண்ணை யுடைய பொதுமகளிர்க்கு, காணம் இல்லாதார்-பொருளில்லாதார், கடு அனையர் - விடம்போற் கொடியராவர்; காண-ஆராயுமிடத்து, செக்கு ஊர்ந்தார் ஆயினும்-செக்கூர்ந்து பொருளீட்டினாராயினும், செய்த பொருள் உடையார் - ஈட்டிய பொருளை யுடையார், அவர்க்கு அக்காரம் அன்னார் - அவர்க்குச் சருக்கரையைப்போன் றினியராவர்.

(பொ-ரை) அன்பு நீங்கிய மனத்தினையுடைய அழகிய நீல மலர்போன்ற கண்ணையுடைய பொதுமகளிர்க்குப் பொரு ளில்லா தார் விடம்போற் கொடிய ராவர். ஆராயுமிடத்துச் செக்கூர்ந்து பொருளீட்டினாராயினும் ஈட்டிய பொருளை யுடையார் அவர்க்குச் சருக்கரையைப்போன் றினியராவர்.

(வி - ரை) செய்தபொரு ளென்றது ஈட்டிய பொருளை; பொதுமகளிர் கைப்பொருளே யல்லது குலநலமுதலிய வேண்டாரென்பார் செக்கூர்ந்தாராயினும் என்றார். செக்கூர்ந்தார் பொருளுதவியவழி யக்கார மென்றும், பொருளில்லாவழிக் கடு என்றும் உவமைமுகத்தாற் கூறினார். அக்காரம் - சருக்கரை. இதனை "அக்கார வடிசில்" என்னும் வழக்கானு முணர்க. உம்மை இழிவுசிறப்பு. காண மென்பதற்கு மேற் கூறினும். காண-காரண காரிய மில்லாது வந்த செயவெனெச்சம். நீலம் - ஆகுபெயர். ஆணம் - அன்பு.

To those harlots of loveless heart, whose eyes are like blue water-lilies, men with no wealth are as poison. But

those who have wealth, even though they may have acquired it by turning the oil-mills, will be as sweet as sugar to them. (·)

375. பாம்பிற் கொருதலை காட்டி யொருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டு மாங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ள றிவி னார்.

(ப - ரை) பாம்பிற்கு ஒரு தலை காட்டி - பாம்பினுக்கு ஒரு புறங் காட்டி, ஒரு தலை - ஒரு புறம், தேம் படு தெள் கயத்து மீன் காட்டும் - இனிமையாகிய தெண்ணீர்கயத்து மீனுக்குக் காட்டும், மலங்கு அன்ன - விலாங்குமீனொத்த, செய்கை மகளிர் தோள் சேர்வார் - செய்கையையுடைய பொதுமகளிர் தோளைத் தோய்பவர், விலங்கன்ன வெள் அறிவினார் - விலங்கினை யொத்த அறிவிலாதார்.

(பொ-ரை) பாம்பினுக்கு ஒரு புறங்காட்டி, ஒருபுறம் இனிமையாகிய தெண்ணீர்கயத்து மீனுக்குக் காட்டும் விலாங்குமீனொத்த செய்கையையுடைய பொதுமகளிர் தோளைத் தோய்பவர் விலங்கினை யொத்த அறிவிலாதார்.

(வி - ரை) வெள்ளறிவு என்புழி வெண்மை யுள்ளீடின்மை யுணர்த்திநின்றது. தன்னைப் பற்ற வரும் பாம்பிற்குத் தலையையும், தனக்குணவாகிவரு மீனுக்கு வாலையுங் காட்டித் தானொன்றுனும் பற்றப்படாத நிலையைக் காட்டலால் ஆசையொன்றுனே மயக்கும் பொதுமகளிர்க் கதனை யுவமை கூறினார். மீன் காட்டும் என்புழி நான்காம் வேற்றுமை யுருபு தொகுத்தல் பெற்றது; "ஐந்தவித்தானாற்றல்" என்புழிப்போல. ஆங்கு - அசை. வெள்ளறிவு மங்கல வழக்கு.

Those who seek the embraces of women, who act dubiously like the eel, which shows its one end to attract the snake, and its other end to attract the fish in the sweet, clear pond, are senseless like beasts. (375)

376. பொத்தநூற் கல்லும் புணர்பிரியா வன்றிலும்போ
னித்தலு நம்மைப் பிரியல மென்றுரைத்த [ஞ்சே!
பொற்றொடியும் போர்த்தகர்க்கோ டாயினா ளன்றெ
நிற்றியோ போதியோ நீ.

(ப-ரை) பொத்த நூல் கல்லும்-நூலொடு தொளைத்த மணியும், புணர் பிரியா அன்றிலும்போல்-கூடியிருப்பது நீங்காத அன்

றிற் பறவையும் போன்று, நித்தலும் நம்மை பிரியலம் - என்றும் நம்மைப் பிரிதல்செய்யேம், என்றுஉரைத்த-என்று கூறிய, பொன் தொடியும் - பொன்னாற் செய்யப்பட்ட வளையலையுடைய பொது மகளும், போர் தகர் கோடு ஆயினாள் - போர்த்தொழில் செய்யும் யாட்டின் கொம்புபோன்ற குணமுடையளாயினாள்; நல் நெஞ்சே- நல்ல மனமே!, நீ நிற்றியோ போதியோ - நீ யவள்பால் நிற்கின்ற னையோ? என்பால் வருகின்றனையோ? (சொல்)!

(பொ-ரை) நூலொடு தொளைத்த மணியும், கூடியிருப்பது நீங்காத அன்றிற் பறவையும் போன்று என்றும் நம்மைப் பிரிதல் செய்யேம் என்று கூறிய பொன்னாற் செய்யப்பட்ட வளையலை யுடைய பொதுமகளும் போர்த்தொழில் செய்யும் யாட்டின் கொம்புபோன்ற குணமுடையளாயினாள். நல்ல மனமே! நீ யவள் பால் நிற்கின்றனையோ? என்பால் வருகின்றனையோ? சொல்!

(வி-ரை) புணர்பிரியாமை என்றது கூடியிருப்பது நீங்கா மையை. பொத்துதல்-தொளைத்தல். கல்லும் அன்றிலும் எண்ணும் மை. நித்தலுமென்ற உம்மை முற்று. நூலுமணியும், ஆண் பெண் அன்றிலும் போல உம்மைப் பிரியேமென் றுவமைமுகத்தாற் கூறியது அவர் சொன்யாத்திரையாற் கூறியதை யுணர்த்தற்கு. பொற்றொடி-அன்மொழித்தொகை. போர்த்தகர்க்கோடாயினாள் என்றார், நூற்கல்லு மன்றிலும் போன்றவள் பொருளற்றவழி நீங்க லின் கோட்டினைப்போலுந் திரிந்த குணமுடையளென்ப துணர நிற்றலின். ஓ விரண்டும் வினா. நிற்றி, போதி என்பன நிகழ்காலங் காட்டும் வினைமுற்றுகள்.

Even the damsel with golden bracelets, who said she would never part from me, just like the gem and the thread on which it is strung, and like the *Anril* bird that cannot endure separation from its mate, has now turned away from me, just as the horns of a fighting ram are turned away from each other. O my dear heart! would you still stay with her, or come back to me? (376)

377. ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉஞ் சில்லைக்க ணன்பினை
யேமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை.

(ப - ரை) ஆமாபோல் நக்கி-காட்டுப்பசுப்போல் நக்கி, அவர் கைப் பொருள் கொண்டு-தம்மை யணைந்தார் கைப்பொருள் கவர்ந்துகொண்டு, சேமாபோல் குப்புறும் - எருதைப்போல் குப்புறுகின்ற, சில்லைக்கண் அன்பினை - பரத்தைமாட்டன்பை, ஏமாந்து எமது என்று இருந்தார் - மயக்க மடைந்து எமக்குரியதென்றிருந்தவர், தாம்-தாம், பலரால் நகைபெறுப-பலராலும் நகைக்கப்படுவர்.

(பொ-ரை) காட்டுப்பசுவைப்போல் நக்கித் தம்மை யணைந்தார் கைப்பொருள் கவர்ந்துகொண்டு எருதைப்போல் குப்புறுகின்ற பரத்தைமாட்டன்பை மயக்கமடைந்து எமக்குரியதென்றிருந்தவர் தாம் பலராலு நகைக்கப்படுவர்.

(வி-ரை) நக்கல் ஈண்டுப்பரிசித்தலை. ஆமா-காட்டுப்பசு. சேமா-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. சில்லை-சின்வண்டு. சில்லைக்கண் - அன்மொழித்தொகை; வண்டுபோன்ற கண்ணுடையாளென்பது வண்டு பூவிடைத் தேனிருக்கு மிடந்தொறுஞ் சென்று கவர்ந்துகொண்டு நீங்குதல்போற் காணமுடையாரிடத் தெல்லாஞ் சென்று நாடுங்கண்ண ளென்பது குறிப்பாற் காட்டிநின்றது. கண்ணென்ப துண்ணோட்டத்தை. ஏமாவென்பது ஒருசொல், செம்மா முதலியனபோல; இவ்வாறே கூறுவர் பரிமேலழகரும். பெறுப என்பது பலர்பால் வினைமுற்று. ஆமா வின்புற நக்கல் போன்று இவரும் ஆலிங்கனமுதலியவற்றான் அவர் கைப்பொருளைக் கவர்தலின் ஆமாபோனக்கி என்றுவமைமுகத்தாற் கூறினார். ஆம், ஏ: அசைநிலை.

Those who fondly count upon the love of the harlot who, like the wild ox, licks the hand and despoils men of their wealth, and then, like the bull, bounds away, will be ridiculed by many in this world. (377)

378. ஏமாந்த போழ்தி னினியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடா—மானேக்கிற்
றங்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்.

(ப-ரை) ஏமாந்த போழ்தின் - காமுகர்பாற் கைப்பொருள் கவர்ந்து தாமகிழ்ச்சி யெய்தியபொழுது, இனியார் போன்று - அவர்க் கினியராய்க் கைப்பொரு ளறக்கொண்டு, தாம் ஆர்ந்த போதே - தாம் பொருளா னிரம்பியபொழுதே, இன்னார் ஆய் -

அவர்க்கின்னாதாராய், தகர் கோடு ஆம் - யாட்டின் கோட்டினைப் போன்று திருகுதலையுடையாராகிய, மான் நோக்கின் - மான்போலும் பார்வையினை யுடையாராய், தம் நெறி பெண்டிர் தடமுலை - தமக்குரிய களவின் வழியிற் றப்பாது நிற்கும் பரத்தையர் பெரிய முலையை, செம் நெறி சேர்தும் என்பார் - செம்மையாகிய வீட்டு நெறியினைச் சேர்வே மென்பார், சேரார் - அடையக் கருதார்.

(பொ-ரை) காமுகர்பாற் கைப்பொருள் கவர்ந்து தாமகிழ்ச்சி யெய்தியபொழுது அவர்க் கினியராய்க் கைப்பொரு ளறக்கொண்டு தாம் பொருளா னிரம்பியபொழுதே அவர்க்கின்னாதாராய் யாட்டின் கோட்டினைப் போன்று திருகுதலை யுடையாராகிய மான் போலும் பார்வையினை யுடையாராய்த் தமக்குரிய களவின் வழியிற் றப்பாது நிற்கும் பரத்தையர் பெரிய முலையைச் செம்மையாகிய வீட்டு நெறியினைச் சேர்வே மென்பார் அடையக் கருதார்.'

(வி-ரை) ஆர்தல் - நிறைதல்; காமுகராவார் மயங்கிய வழி அவர் கைப்பொருளைக் கவருஞ் சிந்தையராகலின் எமாந்தபோதி னினியராய் என்றார். அவர் தங் கைப்பொருளற் றிவர் நிரம்பிய வழி யவர்பால் வெறுப்பெய்துவ ராகலிற் பரத்தையரைத் தகர்க் கோட்டிற் குவமை கூறினார். தகர்க்கோட்டிற் குவமை கூறல் அது மடவார் அவர்தம்மொடு மாறுபட்டிருத்தலை. சேர்தும் - தும்மீற் றுத் தன்மைப் பன்மை. சேர்துமென்பார் - தன்மையொடு படர்க் கை வந்த வழுவமைதி. தந்நெறிப் பெண்டிர் - தந்நெறிச் சென்ற வழிச் செல்பவர். செந்நெறி என்றது சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய் அந்தமி லின்பத் தழிவில் வீட்டு நெறியை.

Those who declare their determination to walk in the righteous path to heaven, seek not the embrace of the fawn-eyed damsels, possessing a crafty habit of their own, who are pleasant only so long as they are propitiated by gifts, but who, when they have had their fill, turn hostile, like the horns of a fighting ram. (378)

379. ஊறுசெய் நெஞ்சந்தம் முள்ளடக்கி யொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
யெமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி னார்.

(ப-ரை) ஒள் நுதலார் - ஒள்ளிய நெற்றியை யுடையார், ஊறு செய் நெஞ்சம் - துன்பத்தைச் செய்யுங் கருத்தை, தம்முள் அட

க்கி - தம்முட் புலப்படா தடக்கிக்கொண்டு, தேற - காமுகர் தெளிய, மொழிந்த மொழி கேட்டு - கூறிய சொல்லைச் செவியிற் கேட்டு, தேறி - அதனை யுண்மையாகத் தெளிந்து, எமர் என்று கொள்வாரும் - எம்மவரென்று கொள்பவரும், கொள்ப-கொள்ளா நிற்பர்; தம் உடன்பினர் - தம்முடம்பினைத் தமக்கே யுரியதாகக் கருது மியல்பினை யுடையார், யார்க்கும் தமர் அல்லர் - யாவர்க்குஞ் சுற்றத்தா ரல்லர்.

(பொ - ரை) ஒள்ளிய நெற்றியையுடையார் துன்பத்தைச் செய்யுங்கருத்தைத் தம்முட் புலப்படா தடக்கிக்கொண்டு காமுகர் தெளியக் கூறிய சொல்லைச் செவியிற் கேட்டு அதனை யுண்மை யாகத் தெளிந்து எம்மவரென்று கொள்பவரும் கொள்ளாநிற்பர். தம்முடம்பினைத் தமக்கே யுரியதாகக் கருது மியல்பினையுடையார் யாவர்க்குஞ் சுற்றதாரல்லர்.

(வி - ரை) பரத்தையர் தம் கருத்தைப் பிறர்க்குப் புலப்படா வண்ண மறைத்துத் தேறமொழிந்த மொழி கேட்டுத் தேறி யெம ரென்று கொள்வாருங் கொள்வர், யார்க்குந் தமரல்ல ரவ்வாறல்ல ராகலின் தம்முடம்பினர் என்றார். உம்மை இரண்டின் முன்னது முற்று, பின்னது உயர்வுசிறப்பு.

There are men who regard the bright-browed damsels as their own, trusting the words uttered by them with a view to inspire confidence, all the while concealing their evil thoughts within. These damsels who regard their bodies as their own, can claim kinship with none. (379)

380. உள்ள மொருவ னுழைபதா வொண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாந்—தெள்ளி
யறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர்.

(ப - ரை) ஒள் நுதலார் - ஒள்ளிய நெற்றியினை யுடையார், உள்ளம் ஒருவன் உழையது ஆக-தம் மனம் பிறனொருவனிடத்த தாக, கள்ளத்தால் செய்யும் கருத்து எல்லாம்-களவினொ லன்பினை யுடையவரைப்போற் செய்யு மெண்ண மனைத்தும், தெள்ளி அறிந்த விடத்தும் - ஆராய்ந் தறிந்தபோழ்தும், பாவம் செறிந்த உடம்பினவர் அறியார் - தீவினைச்செய நிரம்பிய யாக்கையை யுடையார் அறியமாட்டார்.

(பொ-ரை) ஒள்ளிய நெற்றியினை யுடையார் தம் மனம் பிறனொருவனிடத்ததாகக் களவினு லன்பினை யுடையாரைப் போற் செய்யு மெண்ண மனைத்தும் ஆராய்ந் தறிந்தபோழ்தும் தீவினைச்செய் னிரம்பிய யாக்கையையுடையார் அறியமாட்டார்.

(வி - ரை) இருமனப்பெண்டிராகலின் 'உள்ள மொருவ னுழையதா' என்றும், அவர் செய்யும் பொய்யன்பா னறிய மாட்டாமையிற் 'கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்' என்றும், பாவஞ் செறிந்த வுடம்பினவராற் காண்பதரிதாகலின் 'அறியார்' என்றுங் கூறினார். கள்ளத்தாற் செய்யுங் கருத்தென்பது பொய் யாகிய முகமனை. கருத்தெல்லாம் - ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதி. உம்மை சிறப்புணரா நின்றது. உழையதாக வென் புழி ஈறு தொகுத்தல் பெற்றது. உள்ளம்-ஆகுபெயர். பாவமென் றது தீவினையை. 'உடம்பினவர்' என்புழி உடம்புடையாரென்பது மன்றி உடம்பினையுடைய அவரெனக் கொள்ளினு மிழுக்காது.

Even when they clearly come to know the deceitful intentions of the bright-browed harlots, whose mind is always fixed on others, the dupes with bodies full of sin, do not recognise it.

## Chapter XXXIX—Chaste Women

## 39-ஆம் அதிகாரம்: கற்புடை மகளிர்

[கற்பாவது கணவன் சொல்வழி நிற்றல்; அது நாண மடமச் சம் பயிர்ப்பு நான்கு முடைமை யென்க. மேலதிகாரத்தாற் பொதுமகளிர் நலந்துய்த்தல் வேதநூற் பிரமாணமன்றெனக் கூறி இவ் வதிகாரத்தான் மணஞ் செய்துகொண்ட குலமகளோ டில் வாழ்க்கை செய்தல் அறநூற் பிரமாணம் என்ப துணர்த்துகின்ற மையின் மேலை யதிகாரத்தோ டியைபுடைமை யுணர்க.]

381. அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு
நறுநுதலா ளன்மெத் துணை.

(ப - ரை) அரும் பெறல் கற்பின் - அரிய பெறுதலையுடைய கற்பின்கண், அயிராணி அன்ன பெரும் பெயர் பெண்டிர் எனி னும்-இந்திராணியை யொத்தபெரிய இசையினையுடைய மகளிரே யாயினும், விரும்பி பெறு நசையால் - தன்னை விழைய எண்ணிய

ஆசையால், பின் நிற்பார் இன்மையே-தம் பின்னே நின் றிரப்புரை கூறு மாடவ ரின்மையையே, பேணும் நறு நுதலாள் - காக்கு நன்மையாகிய நெற்றியினையுடைய பெண்ணே, நன்மை துணை - தன்னைக் கொண்ட கணவனுக்கு விழுமியதோர் துணையாம்.

(போ - ரை) அரிய பெறுதலையுடைய கற்பின்கண் இந்திராணியை யொத்த பெரிய இசையினையுடைய மகளிரேயாயினும் தன்னை விழைய எண்ணிய ஆசையால் தம் பின்னே நின்றிரப்புரை கூறு மாடவ ரின்மையையே காக்கு நன்மையாகிய நெற்றியினையுடைய பெண்ணே தன்னைக் கொண்ட கணவனுக்கு விழுமியதோர் துணையாம்.

(வி - ரை) இரப்புரை கூறு மாடவ ரின்மையாகக் காத்தலாவது தன்னை ஆடையணி முதலியவற்றுற் கோலஞ்செய்து கோடலை. பெறலரு மெனக்கொண் டுரைப்பாரு முளர். அரும்பெற லென்பதற் கிவ்வாறே பொருள்கூறினர் பேராசிரியரும் "அன்னா ளரும்பெற லன்னாய்" என்னுந் திருக்கோவையாருக்கென்க. அயிராணியை யுவமைகூறினர் நகுடன் இந்திரனாக வந்து விழைய வந்தவழியுஞ் சாபவசத்தனாய்க் கரந்திருந்த இந்திரனையேயன்றி விழையாமையானும், வானவர் மகளிரிற் சிறந்தாளாகலானு மென்க. அவ்விந்திராணியே சூழ்ச்சிகொண் டெழுமுனிவர் சுமக்குஞ் சிவிகையி னிவர்ந்து வருவனேல் யான் விழைவ லென்று கூறி யவன் சிவிகையூர்ந்து வந்தவழி முற்சுமக்கு முதுக்குறைவுடைய முற்றத்துறந்த குறுமுனிவனாற் பாந்தளாகெனச் சபிக்கப்பட்டமையாற் றன்னை நாடி நிற்பா ரின்மையே யவள் கணவனுக்கு இன்னிலை நிகழ்த்தற் குரிய துணையாக விங்ஙனம் கூறினர். உம்மை சிறப்பு. பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது.

Though she may be far-famed as *Indrani* for the rare gift of chastity, that woman of beautiful brow who guards herself, without allowing men enamoured of her charms, to follow after her, is a true help to her husband. (381)

382. குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

(ப - ரை) குடம் நீர் அட்டு உண்ணு இடுக்கண்பொழுதும் - ஒரு குடத்து நீரைக் காய்ச்சி யுண்ணும் வறுமைப்பொழுதினும், கடல் நீர் அற உண்ணும் கேளிர்வரினும்-கடனீரை வற்றச்செய்தா லொத்த சுற்றத்தவர் வந்தகாலத்தும், கடன் நீர்மை-கடமையாகிய தன்மையை, கையாறு ஆ கொள்ளும் - ஒழுக்க நெறியேயாகக் கொள்ளாநிற்கும், மடமொழி மாதர் மனை மாட்சியாள் - மென் மைத்தன்மையையுடைய சொல்லையுடைய பெண்ணே இல்வாழ்க் கைக் குரிய மாட்சிமையினையுடைய குணமுடையாள்.

(பொ-ரை) ஒரு குடத்து நீரைக் காய்ச்சி யுண்ணும் வறு மைப்பொழுதினும் கடனீரை வற்றச்செய்தாலொத்த சுற்றத்தவர் வந்த காலத்தும் கடமையாகிய தன்மையை ஒழுக்கநெறியே யாகக் கொள்ளாநிற்கும் மென்மைத்தன்மையையுடைய சொல்லை யுடைய பெண்ணே இல்வாழ்க்கைக்குரிய மாட்சிமையினையுடைய குணமுடையாள்.

(வி - ரை) மாதர் என்பது குற்றியலுகரவீறு அர் பெறலி பெற்றது. பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. கையாறாக என்புழியும் விகுதி அகரந் தொகுத்தல் பெற்றது. பொழுது மென்புழி உம்மை இழிவு சிறப்பு. கேளிர்வரினு மென்றது அதன் சிறப்புணர நின்றது. கையா றென்றது ஒழுக்கநெறியை. மட மொழி யென்றது குதலைச்சொல்லை. சுற்றத்தவர் பலர் வந்துழியும் தன் கணவ னிடுக்கட்பட்டுழியு முள்ளஞ் சோராது நின்றுளே இன்னிலைக்குரிய ளென்பதாம். கடனீ ரென்பது அவர் மிகுதி யை யுணர்த்திற்று. குடநீ ரட்டுண்ணு மென்றது தண்டுலமின்றித் தண்ணீரை வெந்நீ ராக்கிக்கொண் டருந்துதலை.

Even though in such straitened circumstances, as to afford to live only on a single pot of boiled water, on occasions when relatives, so numerous as to drain the whole sea, visit the family, the soft-voiced house-wife, who regards fulfilling her duties to them as the righteous conduct, is the glory of her home. (382)

383 நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுறை சோரினு—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமர்ந்ததே யில்.

(ப - ரை) நால் ஆறும் ஆறு ஆய்-நாற்றிசையும் வழியேயாகி, நனி சிறிது ஆய் - மிகச் சிறிதாகி, எ புறனும்-எப்புறத்தும், மேல் ஆறு மேல் உறை சோரினும் - ஆகாய வழியால் மழைத் துளி தன் மேற் படினும், மேல் ஆய வல்லாள் ஆய் - மேலாய அறங்களை யாற்றவல்லளாகி, வாழும் ஊர் - தான் வசிக்கும் ஊரவர், தன் புகழும் - தன்னைப் புகழாநிற்கும், மாண் கற்பின் - மாட்சிமைப் பட்ட கற்பினையுடைய, இல்லாள் அமர்ந்ததே இல் - இல்வாழ்க் கைத் துணையோடு வாழ்வதே மனையெனப்படுவது.

(பொ - ரை) நாற்றிசையும் வழியேயாகி மிகச் சிறிதாகி எப்புறத்தும் ஆகாயவழியால் மழைத்துளி தன்மேற் படினும் மேலாய வறங்களை யாற்ற வல்லளாகித் தான் வசிக்கு மூரவர் தன் னைப் புகழா நிற்குமாட்சிமைப்பட்ட கற்பினையுடைய இல்வாழ்க் கைத் துணையோடு வாழ்வதே மனை யெனப்படுவது.

(வி - ரை) பிரிநிலை யேகாரத்தா னங்ஙன மாட்சிமைப் பட்ட கற்பின்மையளோடு வாழ்தல் இடுகாடொக்கு மென்பது. நாற்றிசை யென்புழி முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. நால்ா றென்றது நாற்றிசையினை; அவை கீழ்மேற் றென்வட லென்பன வாம். மேலென்பது மேலிடமாகிய பண்பாகு பெயராயிற்று. மேலென்பது தன்னுடம்பின்மே லென்க. மேலாயவென்றது அற வொழுக்கமாகிய ஒப்புரவு முதலியவற்றை. இச் சிறப்பினை யிங் ஙனமாக விதந்தது அவ் வில்லினிகழும் வறுமையை யுணர்த்தற்கு. உறை - நீர்த்துளி. மாண்கற்பு - பண்புத் தொகைநிலைத்தொடர். மனை வாய்த்தது கொண்டானது தவமாகலின் 'தற்புகழு மாண் கற்பி, னில்லா ளமர்ந்ததே யில்' என்றார்.

On every side the dwelling-house may be open; it may be very small in dimensions; even the rain may drip down on her inside. Still, if the house-wife does not fail in doing noble deeds of virtue, the abode of such a lady of chastity whom the whole village praises for her virtues, is, indeed, a home. ()

384. கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூர்நா ணியல்பினா—ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண்.

(ப-ரை) கட்கு இனியாள்-கண்ணுக்கினிய தோற்ற முடையா ளும், காதலன் காதல் வகை புனைவாள் - கொண்ட கணவன்

இச்சையின்படி கோலஞ்செய்பவளும், உட்குடையாள்-ஊருக்கு நாண்கொள்ளு மியல்புடையாளும், ஊர் நாண் இயல்பினள்-ஊராரைக் கண்டு நாணுங் குணமுடையாளும், உட்கி இடன் அறிந்து ஊடி இனிதின் உணரும் மாதராள்-காதலனுக்கு அஞ்சிச் செவ்வி யறிந்து பிணங்கி யப்புலவி நீக்குங் குணமுடைய மென்மைத் தன்மையுள்ள மொழி பேசுபவளுமாகிய பெண்ணே, பெண் - பெண்டன்மையுடைய ளெனப்படுவாள்.

(பொ-ரை) கண்ணுக்கினிய தோற்றமுடையாளும், கொண்ட கணவன் இச்சையின்படி கோலஞ் செய்பவளும், ஊருக்கு நாண் கொள்ளு மியல்புடையாளும் ஊராரைக் கண்டு நாணுங் குணமுடையாளும், காதலனுக்கு அஞ்சிச் செவ்வி யறிந்து பிணங்கி அப் புலவி நீக்குங் குணமுடைய மென்மைத்தன்மையுள்ள மொழி பேசு பவளுமாகிய பெண்ணே, பெண் தன்மையுடைய ளெனப்படுவாள்.

(வி - ரை) கணவனைக் கண்டவழி யவன் கண்ணுக்கினிய நோக்குடையளாகத் தோற்றுதல்வேண்டுமாதலின் 'கட்கினியாள்' என்றும், அவனைத் தன் கோலத்தால் விழையச் செய்பவளாதல் வேண்டுமாதலின் 'காதலன் காதல் வகை புனைவாள்' என்றும், பிறர் பேசற் கஞ்சுபவளாயிருத்தல் வேண்டுமாதலின் 'உட்குடையாள்' என்றும், எத்தன்மையாராயினும் நாணியிருத்தல் இன்றியமையாக் குணமாதலின் 'ஊர்நாணியல்பினள்' என்றும், கணவன் கருத்துக்கு யாது பிழை நேருமோவென் றஞ்சி யூடி யவன் கருணையனையபோ தூட னீங்கி விழைபவளே|மாதென்பவாதலின் 'உணரு மாதராள்' என்றும், அவளே பெண்ணெனப் படுமாதலின் 'பெண்' என்றுங் கூறினர். இனியாளும், புனைவாளும், உட்குடையாளும், இயல்பினளும், உணருமாதராளுமெனப் பெண்ணைப் பலமுறை விதந்து கூறியது அவள் இல்வாழ்க்கை நடத்து மியல் புணர்த்தற்கு. இதனை "ஊடிப் பெறுகுவங் கொல்லோ" என்னுந் திருக்குறளானும், அதற்குப் பரிமேலழகர் கூறிய வுரையானு மறிக.

She, who is sweet to the eye, who adorns herself as her husband pleases, who inspires awe among the village - folk, and modestly keeps at a distance from them, and who, though submissive to the husband, is yet, at fitting time, stern in her love-quarrels with him,— such a woman of soft voice is the ideal house-wife. (364)

385. எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண்மேற் சேர்ந்
தெழினு, மஞ்ஞான்று கண்டேம்போ னாணுதுமா—
லெஞ்ஞான்று, மென்னை கெழீஇயினர் கொல்லோ
பொருணசையாற், பன்மார்பு சேர்ந்தொழுகு வார்.

(ப - ரை) எஞ்ஞான்றும் எம் கணவர் - எமது கணவர் எக்காலத்தும், எம் தோள்மேல் சேர்ந்து எழினும் - எமது தோள்களில் அணைந்தெழுந்தாலும், அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதும் - அக்காலத்தில் அவரைக் கண்டதொப்ப நாணங்கொள்கின்றேம்; எஞ்ஞான்றும் பொருள் நசையால் - எப்பொழுதும் பொருளாசையால், பல் மார்பு சேர்ந்து ஒழுகுவார் - பலர் மார்பை யணைந்து நடக்கும் பரத்தையர், கெழீஇயினர் கொல்லோ - பலரையும் விரும்புமாறு என்னேயோ?

(பொ - ரை) எமது கணவர் எக்காலத்தும் எமது தோள்களில் அணைந்தெழுந்தாலும் அக்காலத்தில் அவரைக் கண்டதொப்ப நாணங்கொள்கின்றேம்; எப்பொழுதும் பொருளாசையால் பலர் மார்பை யணைந்து நடக்கும் பரத்தையர் விரும்புமாறு என்னேயோ?

(வி - ரை) தம்மைக் கொண்டவனாகலின் 'எங்கணவர்' என்றும், அவரைக் காண்பொழுதெல்லா மச்சமு நாணமு மீதூர்தலால் 'அஞ்ஞான்று கண்டேம்போல் நாணுதும்' என்றும், பன்மார்பு தோயும் பரத்தைய ரெய்தாமைக் காரண மென்னேயோ வென்பார் 'என்னை கெழீஇயினர்' என்றும், காதல் காரண மிதுவன் றென்பார் 'பொருணசையால்' என்றுங் கூறினர். நாணுதுமென்னுந் தம்மீற்றுத் தன்மை இயல்பினான் எதிர்கால நிகழ்காலங் காட்டினமையான் வழுவமைதியின்பாற் கொள்க. பன்மார் பென்றது பலவாடவரை.

Although we are accustomed to the daily embrace of our husbands, still we feel towards them a timid shame, as if we met them for the first time. How is it, then, that the harlots seek the embraces of many, through their love of filthy gain?

386. உள்ளத் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்க ணொண்பொரு—டெள்ளிய
வாண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்.

(ப-ரை) வள்ளன்மை பூண்டான்கண் ஒள் பொருள் - ஈகைத் தன்மை மேற்கொண்டு நடப்பான்கணுள்ள ஒள்ளிய பொருள், உள்ளத்து உணர்வு உடையான் ஓதிய நூல் அற்று - மனத்தின்க ணல்லறி வுடையான் கற்றுத் தேர்ந்த நூலைப்போன்று விளங்கும்; நாண் உடையாள் பெற்ற நலம் - (அதுபோல) நாணமுடையளாகிய குலமகள் அடைந்த அழகு, தெள்ளிய ஆண்மகன் கையில் அயில் வாள் அனைத்து - உணர்வுடைய ஆண்டன்மையுடையான் கையிற் பிடித்த கூரிய வாளினை யொக்கும்.

(பொ - ரை) ஈகைத்தன்மை மேற்கொண்டு நடப்பான்க ணுள்ள ஒள்ளிய பொருள் மனத்தின்க ணல்லறிவுடையான் கற்றுத் தேர்ந்த நூலைப்போன்று விளங்கும்; அதுபோல, நாண முடையளாகிய குலமகள் அடைந்த அழகு உணர்வுடைய ஆண் டன்மை யுடையான் கையிற் பிடித்த கூரிய வாளினை யொக்கும்.

(வி - ரை) இயல்பாற் கொடைத்தொழின் மேற்கொண் டொழுகுவோன் கைப்பொருள் புகழெய்தலான் ஒண் பொருள் என்றார். கற்றவறிவினையுடையா னோதிய நூற்பொருள் பயன் படுதல்போல இயல்பாக நாணமுடையாள் நலமும் யாவரானும் புகழப்படுதலின் அதனை ஆண்மகன் கையி லயில்வா ளனைத்து என்றார். அரோ-அசை. அனைத்தென்பது அத்தனைத் தென்பதன் மரூஉ. வள்ளன்மை யென்பதில் மை விகுதிமேல் விகுதி; இவ் வாறு கொள்ளாது வேறு கூறுவாரு முளர். இது எடுத்துக்காட் டுவமை.

Like the book which a man of good understanding has read, will shine the goodly wealth in the hands of a generous-hearted man And like the keen sword in the hands of a manly hero, will shine the loveliness a chaste woman owns. ()

387. கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்
றொருங்கொப்பக் கொண்டானு மூரன்—ஒருங்கொவ்வா
நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்ப னீராடா
தென்னையுந் தோய வரும்.

(ப - ரை) ஊரன் - ஊரில் வசிப்பவன், கருங் கொள்ளும் செம் கொள்ளும் தூணி பதக்கு என்று ஒருங்கு ஒப்பக் கொண் டான் - கரியநிறமுள்ள கொள்ளினையும் செம்மை நிறமுள்ள கொள்ளினையும் தூணிப்பதக்கு என்னு முகத்த லளவையால்

வாங்கிக்கொண்டனன்; ஒருங்கு ஒவ்வாத - அதுபோலு முழுது மொப்பாகாத, நல் நுதலார்-அழகிய நெற்றியையுடைய பரத்தையரை, தோய்ந்த வரை மார்பன் - அனுபவித்த மலைபோலு மார்பினையுடைய கணவன், நீர் ஆடாது - நீரிற் றோயாது, என்னையும் தோய வரும் - என்னையு மணைய வருகின்றனன், இதென்ன புதுமை!

(பொ-ரை) ஊரில் வசிப்பவன் கரிய நிறமுள்ள கொள்ளினையும் செம்மை நிறமுள்ள கொள்ளினையும் தூணிப்பதக்கென்னு முகத்த லளவையால் வாங்கிக்கொண்டனன். அதுபோலு முழுது மொப்பாகாத அழகிய நெற்றியையுடைய பரத்தையரை அனுபவித்த மலைபோலு மார்பினையுடைய கணவன் நீரிற் றோயாது என்னையு மணைய வருகின்றனன். இதென்ன புதுமை!

(வி-ரை) நகர் வாழ்க்கைய னல்லனாகலின் ஊரன் என்றும், அவன் பேதைமையால் வாங்குத லியல்பாகலிற் கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப்பதக்கென் றொருங்கொப்பக் கொண்டா னும் என்றும், அவன்போலும் பேதைமையாற் பரத்தையர் பலரையு மென்கணவன் தோய்ந்தமையான் நன்னுதலார்த் தோய்ந்த வரை மார்பன் என்றும், நீராற் புனிதமாமென்ப துணர்ந்துந் தா னீராடாம லென்னையு மணைய வருகின்றனன்; என்னையும் புனித மில்லாளாகக் கருதின னென்பாள் நீராடா தென்னையுந் தோய வரும் என்றும் கூறினாள். இதுவு மேலையணி.

The boor of the village is foolish enough to buy both black gram and red gram at the same price. Likewise, my husband whose chest is broad like a mountain, having embraced the fine-browed harlot, who can never bear comparison with me, still seeks my society in his unpurified state. (*Tuni*-32 measures, *Padakku*-16 measures). (387)

388. கொடியவை கூறாதி பாணநீ கூறி
னடிபைய விட்டொதுங்கிச் சென்று—துடியி
னடிக்கண் ணனையமியா மூரற் கதனால்
வலக்கண் ணனையார்க் குரை.

(ப-ரை) பாண - பாணனே!, கொடியவை கூறாதி-கொடுஞ் சொற்களைக் கூறதொழி; ஊரற்கு யாம் துடியின் இடக்கண் அனையம் - தலைவற்கு யாம் உடுக்கையி னிடப்பக்கத்தை யொப்பாவேம்;

அதனால் நீ கூறின் - அவ் வகையால் நீ யாதேனுஞ் சொல்லுமிடத்து, அடி யைய விட்டு ஒதுங்கி சென்று - மெல்லென அடியிட்டொதுங்கி யப்பாற்போய், வலக்கண் அனையார்க்கு உரை-அதன் வலப்பக்கத்தை யொப்பவராகிய பரத்தையர்க்குக் கூறு.

(பொ-ரை) பாணனே! கொடுஞ்சொற்களைக் கூறுமலொழி. தலைவற்கு யாம் உடுக்கையி னிடப்பக்கத்தை யொப்பாவேம். அவ் வகையால் நீ யாதேனுஞ் சொல்லுமிடத்து மெல்லென அடியிட் டொதுங்கி யப்பாற் போய் அதன் வலப்பக்கத்தை யொப்பவராகிய பரத்தையர்க்குக் கூறு.

(வி - ரை) பாணனென்பா னொருவகைச் சாதியான்; அவன் தலைவனுக்குந் தலைவிக்குந் தூதுரைப்பவன். துடியி னிடமருங்கு பயன்படாமையும், வலமருங்கு பயன்படுதலும்போல, பயன்படாத வெம்மை யொழித்துப் பயன்படு மவர்பாலே சென்று கூறென்பாள் துடியி னிடக்கண் அனையம் யாம் அதனால் வலக்க ணனையார்க் குரை நீ யென்று கூறினாள். இது தலைவி தன் றலைமகன் பரத்தையர்பாற் செல்வதைத் தன்பாற் கூற, அதைக் கேட்டு ஆற்றாது நீ சொல்லத்தக்கன வீண்டைக் கூறுதொழிந்து ஆண்டே கூறுக வெனல். இடக்கணனையம் வலக்கணனையார் என்பன வுவமை.

Utter not cruel words, O minstrel! If you would utter them, softly draw back your steps, and go and utter them to the harlots who are serviceable like the *tambour's* right side; for we are, to our lord, unserviceable like its left side. (388)

389. சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
தீப்பறக்க நொந்தேனும் யானேமற்—றீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகல
நோக்கி யிருந்தேனும் யான்.

(ப - ரை) சாய் பறிக்க நீர் திகழும் தண் வயல் ஊரன் மீது - கோரையைப் பறிக்க நீர் விளங்கும் குளிர்ச்சி பொருந்திய வயல் சூழ்ந்த ஊரை யுடையனாகிய தலைவன்மேல், ஈ பறக்க நொந்தேனும் யானே - ஈப் பறக்கையில் ஆற்றாது சால மனம் வருந்தி நின்றேனும்யானே; தீ பறக்க தாக்கி முலை பொருத தண் சாந்து அணி அகலம் - தீ வீசப் பரத்தையர் கொங்கைகள் தாக்கிக் கலவிப் போர் செய்த குளிர்ச்சி பொருந்திய சந்தனச் சாந்தை யணிந்த மார்பினை, நோக்கி யிருந்தேனும் யான் - பார்த்திருந்தேனும் யானே,

(பொ-ரை) கோரையைப் பறிக்க நீர் விளங்கும் குளிர்ச்சி பொருந்திய வயல் சூழ்ந்த ஊரையுடையனாகிய தலைவன்மேல் ஈப் பறக்கையில் ஆற்றாது சால மனம் வருந்தி நின்றேனும் யானே. தீ வீசப் பரத்தையர் கொங்கைகள் தாக்கிக் கலவிப்போர் செய்த குளிர்ச்சி பொருந்திய சந்தனச் சாந்தை யணிந்த மார்பினைப் பார்த் திருந்தேனும் யானே.

(வி-ரை) சாய் என்பது ஒருவகைப் புல்லின் விசேடம்; அது கோரை. ஊரான் என்றது மருதநிலத் தலைவனை. என்னோடு கூடியிருக்குமென்று ஈப் பறக்கக்கண் டாற்றாதிருந்தேனும், இன்று பரத்தையர் கொங்கை ஞெமுங்கத் தாக்கிப் பொருத சந்த மணிந்த மார்பை விழைவேனும் யானே எனத் தலைவி கூறிய வாறு. இதனாற் குலமகளிர் பரத்தையர் சேரியிற் சென்ற தலைவனை நீக்காதிருக்கவேண்டுமென்பது பெறப்பட்டது. மன் மிகுதிப்பொருட்டு. நொந்தேன், இருந்தேன் எனபன வினையாலணையும் பெயர்கள். உம்மை எண்ணின்கணின்றன. ஏகாரம் பிரிநிலை.

When a fly alighted on my lord, whose land is surrounded by cool paddy fields, where waters gleam when cultivators pluck off the grass, I am she, forsooth that felt a pang? I am she, again, that has lived to see his chest adorned with cool *sandal* paste, which was so passionately embraced by the breasts of harlots, as to produce great warmth. (389)

**390.** அரும்பவிழ் தாரினா னெம்மருளு மென்று
பெரும்பொய் யுரையாதி பாண—கரும்பின்
கடைக்கண் ணனையநா மூராற் கதனா
லிடைக்கண் ணனையார்க் குரை.

(ப-ரை) பாண-பாணனே!, அரும்பு அவிழ் தாரினான்-அரும்பு மலரும் மாலையணிந்த தலைவன், எம் அருளும் என்று பெரும் பொய் உரையாதி-எமக்கு இரங்குவனென்று பெரும் பொய்யினைப் பேசாதொழி; ஊரர்க்கு கரும்பின் கடைக்கண் அனையம் நாம்-யாம் தலைவற்குக் கரும்பின் கடைக்கண்ணை யொப்பாவேம்; அதனால் இடைக்கண் அனையார்க்கு உரை-அதனால் இம் மொழியை அக் கரும்பி னிடைக்க ணனைய பரத்தையர்க்கு நீயே சென்றுரை.

(பொ-ரை) பாணனே! அரும்பு மலரு மாலை யணிந்த தலைவன் எமக்கு இரங்குவனென்று பெரும் பொய்யினைப் பேசா

தோழி; யாம் தலைவர்க்குக் கரும்பின் கடைக்கண்ணே யொப்பா லெம்; அதனால் இம் மொழியை அக் கரும்பி னிடைக்க ணனைய பரத்தையர்க்கு நீயே சென்றுரை.

(வி - ரை) எம்மருளு மென்புழி நான்காவது தொகுத்தல் பெற்றது; ஐந்தவித்தா னாற்ற லென்புழிப்போல. உரையாதி - எதிர்மறை யேவலொருமை வினைமுற்று. கரும்பின் கடைக்கண் மதுரத்திற் குறைவும் அதனிடைக்கண் மதுரத்தின் மிகுதியு முண்மையின் தம்பா லன்பின்மையு மவர்பால் அன்புண்மையும் உவமை முகத்தாற் பெறப்பட்டன.

O minstrel! Utter not a gross lie, saying that he who wears a garland of blooming buds, will pity me! I am, to my lord, like the sapless tip of the sugarcane, therefore, speak those words to the harlot, who is as sweet to him as its middle joints. (396)



# Part III

# ON LOVE

# மூன்றாவது காமத்துப்பால்

[அறம்: இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும், பொருள்: இம்மை மறுமையென்னும் இருமையையும், காமமாகிய இன்பம் இம்மை யொன்றனையுமே பயக்கும் ஆதலின் காமத்துப் பாலைப் பிற்கூறப் புகுந்தார்; அஃது அறம்பொரு ளிரண்டன் பிற் கூறவேண்டுமாகலின். தமிழ்நூலார் மாந்தர்க் குறுதிப் பொரு ளெனக் கொண்டன அறம்பொரு ளின்பங்களேயாம்; அற்றாகலி னன்றே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் முப்பாலாகக் கூறினார். பாலின் முறைமையு மினிது விளங்கும். இனிப் பரிமே லழகரும், "ஈண்டின்ப மென்றது ஒருகாலத் தொருபொருளான் ஐம்புல னுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தை; இச்சிறப்புப் பற்றியே வடநூலுட் போசராசனும் சுவை பலவென்று கூறு வார் கூறுக; யாம் கூறிய தின்பச்சுவை யொன்றனையுமே யெனா மிகுத்துக் கூறினான்" என்றனர்.]

## Chapter XL—The Characteristics of Lov

## 40-ஆம் அதிகாரம்: காமநுதலியல்

[இவ் வதிகாரம் காமத்தின் பாகுபாட்டைக் கூறுவது]

391. முயங்காக்காற் பாயும் பசலைமற் றூடி
யுயங்காக்கா லுப்பின்றாங் காமம்—வயங்கோத
நில்லாத் திரையலைக்கும் நீள்கழித் தண்சேர்ப்ப!
புல்லாப் புலப்பதோ ராறு.

(ப - ரை) வயங்கு ஓதம்-விளங்குகின்ற கடலானது, நில்லா திரை அலைக்கும்-நில்லாமல் அலைகளான் மோதும், நீள் கழி தண் சேர்ப்ப-நீண்ட கழிகளின் தண்ணிய கரையையுடைய அரசனே!, முயங்காக்கால் பாயும் பசலை - இருவருங் கூடியிராவிடத் துடம்பு முழுதும் பசலை போர்க்கும்; ஊடி உயங்காக்கால்-புலந்து வருந்தா விடத்து, காமம் உப்பு இன்று ஆம் - இன்பம் உப்புத் துய்ப்பனவற்

றை இன்சுவையாக்கற்கு வேண்டுமளவிற்றாகாது, புல்லா புலப்பது ஓர் ஆறு - புணர்ந்தேநின் றூடுவது இக் காமநோய்க் கோர் நன்னெறியாம்.

(பொ - ரை) விளங்குகின்ற கடலானது நில்லாமல் அலைகளான் மோதும் நீண்ட கழிகளின் றண்ணிய கரையையுடைய அரசனே! இருவருங் கூடியிராவிடத் துடம்பு முழுதும் பசலை போர்க்கும்; புலந்து வருந்தாவிடத்து இன்பம் உப்புத் துய்ப்பனவற்றை இன்சுவையாக்கற்கு வேண்டுமளவிற் றாகாது; புணர்ந்தே நின் றூடுவது இக் காமநோய்க் கோர் நன்னெறியாம்.

(வி - ரை) உப்பு துய்க்கப்படுவனவற்றைச் சுவையாக்குதல் போலப் புலவி நிகழாவிடத் தின்ப மெய்தமாட்டாமையின் உயங்காக்கா லுப்பின்றாங் காமம் எனவும், புல்லாப்புலப்பதோராறு எனவும், அவவாறூடிக் கூடியவழிப் பருவரலெய்து மாகலின், முயங்காக்கால் பாயும் பசலை எனவுங் கூறினார். ஊடல், புலவி என்பன ஒருபொருட் கிளவி. அஃது இருவகைத்து: துனி, புலவியென. துனி யென்பது பெருங் கலாம்; புலவி யென்பது சிறு கலாம். இத் துனியும் புலவியுங் காமத்திற் கின்பமாகலின் "துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று" என்றார். காம முப்பின்றென்பது மாடு கோடு கூரிது என்பது போன்ற வழுவமைதி. தலைமகன் புலவி நீங்கக் கூறியது.

O Lord of the cool shore of the sea, whose sparkling billows roll and dash restlessly! If there be no enjoyment of conjugal pleasure, a sickly hue will spread over the body; and if there be no lovers' quarrels, love will lack its zest. To be passionately united and also to quarrel, is the true way of love.

392. தம்மமர் காதலர் தாழ்சூ ழணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்—கிம்மெனப்
பெய்ய வெழிலி முழங்குந் திசையெல்லா
நெய்த லறைந்தன்ன நீர்த்து.

(ப - ரை) தம் அமர் காதலர் தாழ் சூழ் அணி அகலம் - தம் மாற் காதலிக்கப்படுந் தலைவருடைய மாலையணிந்த அழகிய மார்பினை, விம்ம முயங்கும் துணை இல்லார்க்கு-பூரிக்கத் தழுவுந் தலைவராகிய துணைமை யில்லாதார்க்கு, இம்மெனப் பெய்ய எழிலி முழங்கும் திசை எல்லாம் - இம்மென்னு மோசையுடன் மேகம் மழை

பொழிய முழங்குகின்ற திசையனைத்தும், நெய்தல் அறைந்தால் அன்ன நீர்த்து - சாப்பறை யறைந்தாற்போலுந் தன்மையினை யுடைத்து.

(போ - ரை) தம்மாற் காதலிக்கப்படுந் தலைவருடைய மாலை யணிந்த அழகிய மார்பினைப் பூரிக்கத் தழுவுந் தலைவராகிய துணைமை யில்லாதார்க்கு இம்மென்னு மோசையுடன் மேகம் மழைபொழிய முழங்குகின்ற திசையனைத்தும் சாப்பறை யறைந் தாற்போலுந் தன்மையினை யுடைத்து.

(வி - ரை) கணவனைப் பிரிந்த மாதர் கார்காலம் வந்துழிக் கணவனை நீங்கி யுய்யாராகலானும், முகிலோசை கேட்டாங்குப் பருவரலா னுயிர்ப்பாராகலானு நெய்த லறைந்தன்ன நீர்த்து என் றுவமை முகத்தாற் கூறினர். இதுவு மேலைத்துறை. அறைந் தன்ன என்புழி ஈறு தொகுத்தல் பெற்றது, 'எண்ணிக்கொண் டற்று' என்புழிப்போல. இம்மென ஒலிக்குறிப்பு. நெய்தலென் றது சாப்பறையை.

To those who are separated from their beloved husbands whose beautiful breasts girt with ·arlands, they would hold in close embrace, the noise produced from all quarters by the muttering of the thunder in a raging rain-storm, is like the veritable sounding of the funeral drum. (392)

393. கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுக்கிய
மம்மர்கொண் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைம்மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க்
கிம்மாலை யென்செய்வ தென்று.

(ப - ரை) கம்மம் செய் மாக்கள் கருவி ஒடுக்கிய மம்மர் கொள் மாலை-கம்மியர் தத்தங் கருவிகளைத் தொழிற்படுத் தொடுக் கிய மயக்கங்கொண்ட மாலைக்காலத்தில், மலர் ஆய்ந்து பூ தொடுப் பாள் - பூக்களை யாராய்ந்து மாலையாகத் தொடுப்பாள்; கை மாலை இட்டு - கையகத்து மலர் மாலையை வைத்துக்கொண்டு, துணை இல்லார்க்கு - தலைவரைப் பிரிந்த மடவார்க்கு, இ மாலை என் செய்வது என்று கலுழ்ந்தாள் - இம் மாலை யாது பயன்படுங்கொல் லோ வென்று கலக்கங்கொண் டழுதாள்.

(போ-ரை) கம்மியர் தத்தங் கருவிகளைத் தொழிற்படுத் தொடுக்கிய மயக்கங் கொண்ட மாலைக்காலத்திற் பூக்களை யாராய்

ந்து மாலையாகத் தொடுப்பாள்; கையகத்து மலர்மாலையை வைத்துக்கொண்டு தலைவரைப் பிரிந்த மடவார்க்கு இம் மாலை யாது பயன் படுங்கொல்லோவென்று கலக்கங்கொண் டழுதாள்.

(வி - ரை) பகற்பொழுதெல்லா மலரெடுத் தாய்ந்து மாலையாகத் தொடுக்குந் தொழிலின் முயன்றுளாகலின் 'மலராய்ந்து பூத்தொடுப்பாள்' என்றும், தலைவன் வரும்வருமென் றிருந்தவழியவன் வாராதவழி யம்மாலை பயன்படாமையான் 'துணையில்லார்க், கிம்மாலை யென்செய்வதென்று, கலுழ்ந்தாள்' என்றும், இஃதுங் கார்ப்பருவமென்ன தகைத்தாகலின் 'மம்மர்கொள்மாலை'என்றும், இடைவிடாது தொழிலாற்றுங் கம்மியருந் தந்தந் தொழில்விட்டொழிப்பராகலின் 'கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுக்கிய' என்றுங் கூறினர். இது, தலைமகள் சேல்ல வுடன்படாமையைத் தலைவந்துப் பாங்கி யுரைத்தது.

At the approach of darkness in the evening, when workmen cease work and lay by their several tools, a love-sick lady would cull flowers and weave them into a garland; and then, holding the wreath in her hand, would weep bitterly, saying: Of what use is this to a woman who is separated from her lord?

394. செல்சுடர் நோக்கிச் சிதரரிக்கண் கொண்டநீர்
மெல்விர லூழ் தெறியா விம்மித்தன்—மெல்விரலி
னாள்வைத்து நங்குற்ற மெண்ணுங்கொ லந்தோதன்
றோள்வைத் தணைமேற் கிடந்து.

(ப-ரை) செல் சுடர் நோக்கி-மேலைக்கடல் புகச்செல்கின்ற ஞாயிற்றை கண்டு, சிதர் அரி கண் கொண்ட நீர் - சிதறிய செவ்வரி பரந்த கண்களிற் கொண்ட நீரை, மெல் விரல் ஊழ் தெறியா-மென்மையாகிய விரல்களால் முறையினெடுத்து வீசி, தன் மெல் விரலில் நாள் வைத்து-தன் மென்மையாகிய விரல்களால் நாளைக் கணக்கிட்டு, விம்மி - விம்மாநின்று, தன் தோள் அணைமேல் வைத்து - தலைவி தன் தோளை யணையாகவைத்து, கிடந்து நம் குற்றம் எண்ணுங்கொல் அந்தோ -படுத்து ஐயோ ! நம் பிழையை யெண்ணுமோவென்று பாகனோடு கூறினான்.

(பொ - ரை) மேலைக்கடல் புகச்செல்கின்ற ஞாயிற்றைக் கண்டு சிதறிய செவ்வரிபரந்த கண்களிற் கொண்ட நீரை மென்மையாகிய விரல்களான் முறையினெடுத்து வீசித் தம் மென்மை

யாகிய விரல்களால் நாளைக் கணக்கிட்டு விம்மாநின்று, தலைவி தன் தோளை யணையாகவைத்துப் படுத்து, 'ஐயோ! நம் பிழையை யெண்ணுமோ?' என்று பாகனோடு கூறினான்.

(வி - ரை) ஞாயிறு குடதிசையை நோக்கிச் செல்வதாகலின் 'செல் சுடர்' என்றான். செல் சுடர்-அன்மொழித்தொகை. தலைவியைப் பிரிந்து தலைவன் தான் குறித்துப்போந்த காலத்தே வாராமையின் அவன் சென்ற நாளைவைத்து விரலினெண்ணுமாகலானும், தன் கையணைமேல் இன்னது செய்வே மென்பதனைச் செய்யாமை தவறினமையானும் வருந்துமாகலின், 'நாள் வைத்து நங்குற்ற மெண்ணுங்கொ லம்தோதன் தோள்வைத் தணைமேற் கிடந்து' என்றான். 'அந்தோ' என்றது இரக்கத்தின் கண் வந்தது. செவ்வரி பரந்த கண்ணினழுகையு மறைத்து நிற்பது என்பது தோன்ற 'சித்ரரிக் கண்ணீர் கொண்ட' என்றதென்க. இது, வினைமுற்றிநின்ற தலைவன் பாகன் கேட்பக் கூறியது. பாகனொடு கூறினா னென்பது இசையெச்சம்.

Looking at the setting sun and wiping away with her soft fingers, the tears that well up in her red eyes, and counting the days of my absence on the same soft fingers, my beloved lady sobs, lying with her arms under her head. Alas! Is she counting up my faults? (394)

395. கண்கய லென்னுங் கருத்தினாற் காதலி
பின்சென்ற தம்ம சிறுசிரல்—பின்சென்று
மூக்கி யெழுந்து மெறிகல்லா வொண்புருவங்
கோட்டிய வில்வாக் கறிந்து.

(ப - ரை) கண் கயல் என்னும் கருத்தினால் - கண்களைக் கயலென்று சொல்லப்படுகின்ற கருத்தால், காதலி பின் சென்றது அம்ம சிறு சிரல்-சிறிய சிரல் என்னப்படும் பறவை தலைவிபின் தொடர்ந்து சென்றது; பின் சென்றும் - பின்சென்று தொடர்ந்தும், ஊக்கி எழுந்தும் - முயன்றும், ஒள் புருவம் கோட்டிய வில் வாக்கு அறிந்து எறி கல்லா - ஒள்ளிய புருவம் வளைக்கப்பட்ட வில்லின் வளைவுபோ லிருந்ததை யுணர்ந்து பிடியாமனின்றது.

(பொ - ரை) கண்களைக் கயலென்று சொல்லப்படுகின்ற கருத்தால் சிறிய சிரல் என்னப்படும் பறவை தலைவிபின் தொடர்ந்து சென்றது; பின்சென்று தொடர்ந்தும் முயன்றும் ஒள்ளிய

புருவம் வளைக்கப்பட்ட வில்லின் வளைவுபோலிருந்ததை யுணர்ந்து பிடியாமனின்றது.

(வி - ரை) சிரல் என்பது மீன்கொத்திப்பறவை; அது தன் காதலியின் கண்ணைக் கயலென்று கருதிச் சென்றடைந்து கோட்டிய புருவந் தோன்றுதல் கண்டாங்கு பிடியாமையைப் பார்த்தே தலைவன் வியந்தவாழகைக் கூறினன். கண்கயலென்பதூஉம் புருவம் வில்லென்பது முவமை. அம்மவென்பதனை 'அம்ம கேட்பிக்கும்' என்பதனாலறிக. பார்க்கு முதனிலை திரிந்த தொழிற்பெயர். இது, தலைவன் புறுமை பாங்கற்குரைத்தல்.

Mistaking my beloved lady's eyes for carp-fish, the little king-fisher had followed after her; and though it followed and poised itself on high, it darted not down [illegible] through fear, as her gleaming eye-brow was like a bow.

396· அரக்காம்பல் நாறும்வா யம்மருங்கிற் கன்றோ
பரற்கான மாற்றின கொல்லோ—வரக்கார்ந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சிப்பின் வாங்கு மடி.

(ப - ரை) அரக்கு ஆம்பல் நாறும் வாய் அம் மருங்கிற்கு - செவ்வாம்பல்போலும் விளங்குகின்ற வாயையும் அழகிய இடையையுமுடையாட்கு, அரக்கு ஆர்ந்த பஞ்சிகொண்டு ஊட்டினும் - செம்மை நிறமமைந்த பஞ்சிக்குழம்பைக் கொண்டு பூசினும், பையென பையென என்று - மிக மெல்லனவாகவென்று, அஞ்சிப்பின் வாங்கும் அடி - அஞ்சி ஆற்றாமல் வருந்துமடிகள், அன்றோ பரல் கானம் ஆற்றின கொல்லோ - பருக்கைக் கற்களையுடைய காட்டிற் செல்லப் பொறுத்தனவோ?

(பொ-ரை) செவ்வாம்பல்போலும் விளங்குகின்ற வாயையும் அழகிய இடையையு முடையாட்குச் செம்மைநிற மமைந்த பஞ்சிக் குழம்பைக்கொண்டு பூசினும் மிக மெல்லனவாக என்றஞ்சியாற்றாமல் வருந்துமடிகள் பருக்கைக் கற்களையுடைய காட்டிற் செல்லப் பொறுத்தனவோ?

(வி - ரை) அடிக்குப் பஞ்சி யூட்டிய ஞான்று பையென பையெனவென்பாள், இற்றைஞான்று பரற்கானந் தலைவன்பின் போதலெவ்வா றவளடிகள் பொறுத்தனவென்று தாய் மகளைப் போக்கி இரங்கல் உணர்த்திற்று. பைய என்பது ஈறு தொகுத்தல் பெற்றது. அடுக்கு மிகுதிப்பொருளது. அம் என்றது அழகினை.

மருங்குல்-ஆகுபெயர். அம்மருங்கு லென்புழி அம் உரிச்சொல்லாக லின் அதனை உரிச்சொற்றொடர்ப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை யென்னலாமோ வெனின், வேற்றுமை வினை பண்பு உவமை உம்மையென்னு மிவ்வைந்து தொகைப்புறத்தும் புறத்து மொழி யாதேனுமொன்று தொகப்பெறி னன்மொழித் தொகை [illegible] இவ்வாறு கொள்ளமாட்டாமையால் அது [illegible] யறிக. அன்றே [illegible] பொருளது. [illegible]

When light cotton soaked in [illegible] was applied to the tender feet of my darling daughter, whose mouth [illegible] of the red water-lily and whose waist is lovely, she cried "Gently, gently," and drew them [illegible] such delicate feet endured walking in the stony desert, after her husband? (396)

397. ஓலைக் கணக்க ரொலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதில் மணந்தார் பிரிவுள்ளி
மாலை பரிந்திட் டழுதாள் வனமுலைமேற்
கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து.

(ப-ரை) ஓலைக் கணக்கர்-ஓலையி லெழுதும் கணக்கருடைய, ஒலி அடங்கு புல் செக்கர் - ஓசை யடங்காநிற்கும் புன்மையாகிய செவ்வானத்தையுடைய, மாலைப்பொழுதின் மணந்தார் பிரிவு உள்ளி - மாலைக்காலத்தில் தன் கணவன் பிரிவை யெண்ணி, வனமுலைமேல் - அழகிய கொங்கைமேல், கோலஞ் செய் சாந்தம் திமிர்ந்து - ஒப்பனைசெய்த சந்தனப் பூச்சினை யுதிர்த்தொழித்து, மாலை பரிந்திட்டு - மாலைகளைக் கழற்றி யெறிந்து, அழுதாள் - புலம்பிநின்றாள்.

(பொ-ரை) ஓலையை யெழுதும் கணக்கருடைய வோசை யடங்காநிற்கும் புன்மையாகிய செவ்வானத்தையுடைய மாலைக் காலத்தில் தன் கணவன் பிரிவை யெண்ணி யழகிய கொங்கை மேல் ஒப்பனைசெய்த சந்தனப் பூச்சினை யுதிர்த்தொழித்து மாலை களைக் கழற்றியெறிந்து புலம்பிநின்றாள்.

(வி - ரை) இது மாலைப்போழ்தின்கண் தன் கணவன் பிரி வுள்ளி மாலையைக் கழற்றிக் கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து தன் பாங்கியிடத்தழுது கூறலை யுணர்த்திற்று. ஊரகத்துக் கணக்குகளை

யெழுதுவோரை ஓலைக்கணக்கர் என்றார். மணந்தார் என்றது தம்மைத் தெய்வமணத்தாற் கொண்டாரை. பரிதல் என்றது கழற்றி யெறிதலை. மாலையெனப் பொதுவகையாற் கூறினமை யான் மலர்மாலைகளென் றுரைப்பதன்றி முத்துவடமுதலியன வுங் கொள்க.

...dle of accounts ... ing the palm-leaf scrolls ... evening twilight-hour, she thought of her absent husband and wept, brushing the sandal-paste from her breasts, and throwing away the garlands she had worn.

398. கடக்கருங் கானத்துக் காளைபின் னாளை
நடக்கவும் வல்லையோ வென்றி — சுடர்த்தொடீஇ!
பெற்றா னொருவன் பெருங்குதிரை யந்நிலையே
கற்றா னஃதூரு மாறு.

(ப-ரை) சுடர்த்தொடீஇ - ஒளியமைந்த வளையல்களையுடையாளே!, கடக்க அரு கானகத்து - யாருங் கடந்து செல்வதற் கருமையாகிய காட்டின்கண், காளை பின் - காளையன்னானாகிய தலைவன் பின், நாளை நடக்கவும் வல்லையோ என்றி - நாளை நீ நடந்து செல்லவு மாட்டுவையோவென்று கூறிநின்றனை; பெருங்குதிரை பெற்றான் ஒருவன்-பெரிய குதிரை யொன்றனைப் பெற்றுடையா னொருவன், அந்நிலையே - அதனைப் பெற்ற வத்துணைப்பொழ்தே, அஃது ஊரும்ஆறு கற்றான்-அதனை மீதூர்ந்து நடத்துமாறு கற்ற வனேயாவன், ஆகையால் கணவன் பிற்சேற லரியதேயன்று.

(பொ - ரை) "ஒளியமைந்த வளையல்களை யுடையாளே! 'யாருங்கடந்து செல்வதற் கருமையாகிய காட்டின்கண், காளையன்னானாகிய தலைவன் பின், நாளை நீ நடந்து செல்லவுமாட்டுவையோ' என்று கூறிநின்றனை; பெரிய குதிரையொன்றனைப் பெற்றுடையா னொருவன், அதனைப் பெற்ற வத்துணைப்பொழ்தே அதனை மீதூர்ந்து நடத்துமாறு கற்றவனே யாவன்; ஆகையால், கணவன் பிற்சேற லரிதேயன்று.

(வி-ரை) கடக்கரு மென்புழி வினையெச்சத் தகரந் தொகுத்தல் பெற்றது. சுடர்த்தொடி - அன்மொழித்தொகை; அளபெழுந்து விளியுருபேற்றது. உம்மை எதிர்மறை. ஆகையாற் கணவன் பிற்சேற லரிதேயன்று என்பது குறிப்பெச்சம். கற்றல் - குதிரை யூர்ந்து நடத்தல். காளை - ஆகுபெயர். நாளை நடக்கவும் வல்லை

யோவென்றி என்பதனாற் பாங்கி கூறியதாகத் தலைவி கூறிய துணர்த்தப்பட்டது. பெற்றனொருவன்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. என்றி-முன்னிலை வினைமுற்று. ஓகாரம் வினா. ஏகாரம் தேற்றம். கடக்கருங்கான மென்றது பிறர் கடத்தற்கருமை யுணர்த்தற்கு.

'O my maid with shining bracelets! You questioned me whether, on the morrow, I can walk after my husband in the desert, difficult of crossing? Oh! it is not really difficult for me to follow him! For, when one has secured a splendid horse, would he not, at the same time, learn how to ride it? (398)

399. முலைக்கண்ணு முத்து முழுமெய்யும் புல்லு
மிலக்கணம் யாது மறியேன்—கலைக்கணம்
வேங்கை வெரூஉ நெறிசெலிய போலுமென்
பூம்பாவை செய்த குறி.

(ப - ரை) முலைக்கண்ணு முத்து முழு மெய்யும் - முலைக் காம்புகளும் முத்துவடமும் அழுந்த என்னுடம்பு முழுதும், புல்லும் இலக்கணம் யாதும் அறியேன்-அணையுங் குறி சிறிது மறிதல் செய்யேன்; என் பூம்பாவை செய்த குறி - தாமரைத் தவிசுகந்த பாவையன்னளாகிய என் மகள் செய்த குறியானது, கலைக்கணம் வேங்கை வெரூஉம் நெறி செலியபோலும் - மான்கூட்டம் வேங்கையை யஞ்சும் வழியிற் போதற்குப்போலும்.

(பொ-ரை) முலைக்காம்புகளும் முத்துவடமும் அழுந்த உன்னுடம்பு முழுதும் அணையுங் குறி சிறிது மறிதல் செய்யேன். தாமரைத் தவிசுகந்த பாவையன்னளாகிய என் மகள் செய்த குறியானது மான்கூட்டம் வேங்கையை யஞ்சும் வழியிற் போதற்குப் போலும்.

(வி-ரை) "அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு, மெச்ச மிலவே பொருள்வயி னான" என்ப தோத்தாகலின் வேங்கை வெரூஉ மென்பதற்கு வேங்கையை யஞ்சுமெனக் கொள்ளப்பட்டது; இக்காலத்து வேங்கைக் கஞ்சுமெனக் கொள்வது வழக்கு. போலும்-ஒப்பில்போலி; "ஒப்பில்போலியுமப்பொருட்டாகும்" என்பதனாற் கொள்க. பூம்பாவை என்ப தன்மொழித்தொகை. உம்மை எண்ணின்கணின்றன. யாதுமென்புழி உம்மை முற்றுப்பொருளோ

டிழிவுசிறப்புப் பொருளது. அறியே னென்புழி எகாரமே யெதிர மறைப்பொருளதென்பர் சேனாவரையரும். ஆகார் கிருதி புணர்ந்து கெட்டதென்ப திக்காலவழக்கு. அளபெடுத்ததின்னோசை நிறைதற்கு. என் பூம்பாவை முலைக்கண்ணு முத்து முழுமெய்யும் புல் மிலக்கண மென்பதனால் நெருநல் அவள் இவ்வாறு செய்து நின்றமை தான் பிரிதற்குப்போலு மென்பார் யாது மறியேனென் றிழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறினர்; அது யாவருட நெறியென்பார் கலைக்கணம் வேங்கை வெரூஉ நெறி எ இது, மகட் போக்கிய தாய் கவன் றுரைத்தது.

Pressing her breast nipples and her necklace of my darling daughter closely embraced my whole body. I then knew not what it meant? It now dawns on me, it was the sign made by my darling, that she was about to set out on the stony desert-path, where herds of deer flee in terror before the tiger. (399)

400. கண்மூன் றுடையானுங் காக்கையும் பையரவு
மென்னீன்ற யாயும் பிழைத்ததென்—பொன்னீன்ற
கோங்கரும் பன்ன முலையாய்! பொருள்வயிற்
பாங்கனார் சென்ற நெறி.

(ப-ரை) பொன் ஈன்ற கோங்கரும்பு அன்ன முலையாய்-பொன்போலுஞ் சுணங்கடர்ந்த கோங்கரும்புபோன்ற கொங்கையை உடையாய்!, கண் மூன்று உடையானும்-கண்கள் மூன்றுடையானும், காக்கையும் பையரவும் - காக்கையும் படத்தையுடைய பாம்பும், என் ஈன்ற யாயும்-என்னைப் பெற்ற தாயும், பிழைத்தது என்-எனக்குச் செய்த பிழை யாது மின்று; பாங்கனார் பொருள்வயின் சென்ற நெறி - எமது தலைவர் பொருளீட்டுதற்காகப் போந்த நெறியேயாம்.

(பொ-ரை) பொன்போலுஞ் சுணங்கடர்ந்த கோங்கரும்பு போன்ற கொங்கையை யுடையாய்! கண்கள் மூன்றுடையானும், காக்கையும், படத்தையுடைய பாம்பும், என்னைப் பெற்ற தாயும் எனக்குச் செய்த பிழை யாது மின்று; எமது தலைவர் பொருளீட்டுதற்காகப் போந்த நெறியேயாம்.

(வி-ரை) கோங்கரும்பன்ன முலையா யென்றது பாங்கியை. சுணங்கு நனி பூத்தமையின் பொன்னீன்ற வென்றதென்க. கண்

...றுடையா னென்றது சிவனை; அஃது 'இமையாத முக்கண் ...வரிற் பெற்றவர்' என்பதனானுணர்க. முக்கணாவன சோமன் சூரி ...னை அக்கினி யென்பன. மலரம்பெறிந்த மாரனை யெரித்து மீட்டு ...தவிய கண்மூன்றுடையானும், தன் கூட்டில் வளர்த்த குயிலைக் ...க்கிக் கொலை செயாது காத்த காக்கையும், மதியை விழுங்கிப் ...னுமிழ்ந்த அரவும், என்னைப் பெற்ற ஞான்றே கொல்லாது ...டு வளர்த்த தாயுமே பிழைசெய்தன ரெனத் தலைவி தன் பிரி ...ருமையைத் தோழியொடு கூறியது; இங்குக் கண்மூன்றுடை ...யான் முதலியவாக விதந்து கூறினமை கணவனைப் பிரிந்துழித் ...னை வருத்து மாரனையுங் குயிலையும் மதியையும் நான் கருதற் பாலதன்று; தாய் கொன்றிருந்தாளாயின் இத்துணைத்துன்ப மெய்தே னென்பாள் என்னீன்ற தாயெனப் பிற் கூறியவாறெ ன்க. ஏன் என்னும் வினாவினைக் குறிப்புமுற் றீண்டென்னென் றாகி யின்மை குறித்துநின்றது; இதனைக் 'கற்றதனா லாய பய னென்கொல்' என்புழிப் பரிமேலழகர் கூறலானு முணர்க. கண் மூன்றுடையான் காக்கை படவரவு யாய் என்பன விரவிப் பிழை ...த்தவென்னும் தொழிற்பெயர் கொண்டது. பொன்-ஆகுபெயர்.

O maid, whose bosom, covered with a golden hue, resembles the *kongu* bud! The three-eyed god *Siva*, the crow, the hooded serpent, and the mother that bore me: What wrong have these done to me? None of them do I blame! I blame only the path which separated me from my husband, in his distant journey in quest of wealth.

நாலடியார் மூலமும் உரையும்

முற்றுப் பெற்றன.








[THIRD EDITION] 1926 [2000 COPIES

உ

கடவுள் துணை

# நாலடியார்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

புகழேந்திப்புலவர் செய்த

# நளவெண்பா

மஹா வித்வான் கோமளபுரம் இராஜகோபாலப்பிள்ளை அவர்கள் இயற்றிய பதவுரை, விசேஷவுரை, இலக்கணக்குறிப்பு முதலியவற்றுடன்.

விலை ரூபா 1—8—0

நளவெண்பா என்பது நளனுடைய சரித்திரத்தை [illegible] வெண்பாக்களால் [illegible] நூல் எனப் பொருள்படும். [illegible] ஆறு சக்கரவர்த்திகளுள்ளும், முதல் எழு வள்ளல்களுள்ளும் ஒருவனாவன், ஆறு சக்கரவர்த்திகளாவார்: (1) அரிச்சந்திரன், (2) நளன், (3) முசுகுந்தன், (4) புருகுச்சன், (5) புரூரவன், (6) கார்த்தவீரியன். முதல எழு வள்ளல்களாவார்: (1) குமணன், (2) சகரன், (3) சகாரன், (4) செம்பியன், (5) துந்துமாரி, (6) நளன், (7) நிருதி. நளச் சக்கரவர்த்தி விஷ்ணுபக்தரென நூல்கள் கூறுகின்றன.

தமிழில் நள சரித்திரத்தைக் கூறும் நூல்களில் முக்கியமானவை: (1) நளவெண்பா, (2) நைடதம். இவ்விரண்டு நூல்களுள், நைடதம் அதிவீரராம பாண்டியனால் விருத்தப்பாவினால் இயற்றப்பெற்றது; நளவெண்பா புகழேந்திப் புலவரால் வெண்பாவினால் இயற்றப்பட்டது.

புகழேந்திப்புலவர்: ஒட்டக்கூத்தர் காலத்திலே பாண்டியன் சமஸ்தானத்து வித்வானாக விளங்கிய ஓர் புலவர் திலகர். தமிழில் வெண்பாப் பாடுவதில் புகழேந்திக்கு ஒப்பாரு மிக்காரும் இல்லை. இவருடைய கவித்திறமையைக் கண்ட ஒட்டக்கூத்தர், பொறாமைக் குணத்தால் இவருக்குத் துன்பங்கள் பல செய்யப்புகுந்தும், இறுதியில் இவருடைய வித்வத்தன்மையையும், இனிய குணங்களையும் கண்டு வியந்து, இவரோடு கலந்து இவர் நண்பராயினர் என்ப.

இந் நளவெண்பாவுக்கு இன்னும் வேறு உரைகள் இருப்பினும் அவற்றுள் [illegible] இலக்கணத்திற்கோர் இலக்காய் [illegible] வித்வான் கோமளபுரம் இராஜகோபால[illegible] உரையே மிகவும் சிறப்புடையது [illegible] ரும் புலவர்களுக்கும், உரை [illegible] யரே மிகவும் சிறந்து பிரகாசித்து வ[illegible]ம்.

மூலம் [illegible] விலை ரூபா 1

[illegible] விலை ரூபா 4